உ

கடவுள் துணை.

# பஞ்சாட்சரப்பதிகம்

# நடராஜப்பத்து

## சங்கப்புலவர் கண்டசுத்தி

இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன.





சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1924.

இதன்விலை அணா 1.

உ

கடவுள் துணை.

பஞ்சாட்சரப்பதிகம்.

# நடராசப்பத்து.

சங்கப்புலவர் கண்டசுத்தி

இம்மூன்றும் அடங்கியிருக்கின்றன.



இஃது

குயப்பேட்டை,

வீ. இராஜு முதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்.

மு. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால்

சென்னை:

பி. நா. சிதம்பரமுதலியார்

பிரதர்ஸ் அவர்களது

சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

192[illegible].

இதன்விலை அணா 1.



உ

கடவுள் துணை.



## சிதம்பரம் நடராஜர்

# பஞ்சாட்சரப்பதிகம்.

வசியசிவசங்கரா வசியகெங்காதரா வசியகைலாசவாசா. வசியபணியணியுரக வசியமான்மழுகராவசியசிவகாமிநேசா, வசியதிரிநேத்திரா வசியபுவனேஸ்வரா வசியவோம் நடனபாதா, வசியகரியுரியழக வசியபுலியிடையழக வசியசிரமாலையழகா, வசியமதிமுடியழக வசியபசுபதியழக வசியவென்மனதில்வாசா, வசியமுன்னூலழக வசியவெண்ணீரழக வசியமவற பரவு'' ழகா, வசியவெனவுனையனுதினம் போற்றுமடியார்க்கு னருள்மடைதிறந்ததில்லை. அதிபதிஜெனகாதி துதிபதி சிவகாமி அன்பிலுறைநடனபதியே. க

சிவயநமவென்றுதின மூழ்கியுருவேற்றுவோர் செய்தொழிலெலாம் வசியமாம், ஜெகவசியமாம்செகல முகவசியமாம்செய்த சித்துகளெல்லாம் வசியமாம், வயநமசியென்றுவுரு வேற்றுவோர்சத்ராதிவானுடவிட்டபட்டதாம், அடங்காதபூதபேதப்பசாசிவையெலாம்வளர்குலாலன்கிகிரியாம், யநமசிவவயநமசி சிவயநமமசிவயந எல்லாமுன்னடனமன்றோ, யிவ்வுலகப் பொருளுதவி அவ்வுலகமருளுதவியீயவருதெய்வமுளதோ, அவனுதிபுவனுதி சௌனுதி முத்தர்க்கு அருள்மடை திறந்ததில்லை, அதிபதிஜெனகாதி துதிபதிசிவகாமி அன்பிலுறைநடனபதியே. உ

புல்லாய்ப்பிறந்தாலு மிருகாதிஜெனனங்கள் பசியாறிமகிழுமன்றோ, பூண்டாய்ப்பிறந்தாலும் புலத்தியர்கள்கொண்டுசில பிணிதீர்க்

து புகழ்வரன்றோ, கல்லாய்ப்பிறந்தாலும் வல்லவர்கள்மிதிகொண்டு காட்சிக்குருத்துமன்றோ, கழுதையுருவந்தாலும் ஆவெனக்கத்தினல் கைகண்டசகுனமென்பார், எல்லாமிலாமலே யிப்பிறவிதந்தென்னை யேங்கவிட்டகலநின்றாய், எத்தனை அன்னையின் எத்தனைதந்தையின் எத்தனைபிறவிவருமோ, அல்லலெனுமாசறுத் தாட்கொளுந்தெய்வமே அப்பனேதில்லைநகர்வாழ், அதிபதீஜெனகாதி துதிபதிசிவகாமி அன்பிலுறை நடனபதியே. ௩

கல்லாதமூடரைக் கயவரைக்காமுகரைக் கல் நஞ்சவஞ்சரிவரைக், கற்றுமறிவில்லாதமோழையைக் கோழையைக் காக்கவைத்துண்டபேரை, பொல்லாதமூர்க்கரை *மிருகங்கள்போன்றவரை பொய்க்குமஞ்சாதபேரை, பூமியிற்பிறருக்கு யிடுக்கமுயலவோர்களைப் பிணமொத்தபேரைபலரை, நல்லாரெனக்கவிகள்சொல்லியலைபாமல்நா னளாவதென்றுசிவமே, நானன்றிநீயேது நீயன்றிநானேது நானுயுரைத்ததேது, அல்லிலும்பகலிலும் நீயிலாதசைவேது அருள்மடைதிறந்ததில்லைத், கதிபதிஜெனகாதி துதிபதீசிவகாமி அன்பிலுறை நடனபதியே.

ஜெகமெட்டுத்திசைகளுங் கிரிகள்பலதெய்வமும் செம்பொன்மணிமாடமேடை, சேயன்னைதந்தையும் நானென்றஆணவஞ் செல்வமும்வலலசித்தும், முகடேறுமெமனுக்கு முன்வந்துவுதவுமோ முத்திக்கு வித்துமுளதோ, மூவாசைவிட்டுகனி சருகாதிதின்றாலும் முன்செய்தவினையகலுமோ, ஈசனீகாணுத யிருளேதுவெளியேது நினைவேதுகனவுமேது, அகவுறவுபற்றற்று துறவுறவுமுற்றற்று ஆரியர்கள்பரவுதில்லை, அதிபதீஜெனகாதி துதிபதீசிவகாமி அன்பிலுறை நடனபதியே. ௫

திருச்சிற்றம்பலம்.

---

# நடராஜப்பத்து.

---

மண்ணாதிபூதமொடு விண்ணாதி அண்டம்நீ மறைநான்கின் அடிமுடியும்நீ, மதியும்நீ ரவியும்நீ புனலும்நீ அனலும்நீ மண்டலமிரண்டேழும்நீ, பெண்ணும்நீ ஆணும்நீ பல்லுயிர்க்குயிரும்நீ பிறவும்நீ வொருவநீயே, பேதாதிபேதம்நீ பாதாதிகேசம்நீ பெற்றதாய்தந்தை நீயே, பொன்னும்நீ பொருளும்நீ யிருளும்நீ ஒளியும்நீ போதிக்கவந்தகுருநீ, புகழொணாகிரகங்க ளொன்பதும்நீயிந்தப் புவனங்கள்பெற்ற

வனும் நீ, எண்ணரிய ஜீவகோடிகளீன்ற வப்பனே என்குறைகளார்க்குரைப்பேன், யீசனே சிவகாமி நேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. க

மானாட மழுவாட மதியாட புனலாட மங்கைசிவ காமியாட மாலாட நூலாட மறையாட திரையாட மறைதந்த பிர்ம்மனாட, கோனாடவானுலகு கூட்டமெல்லாமாட குஞ்சரமுகத்தனாட, குண்டலமிரண்டாட தண்டைபுலி யுடையாட குழந்தைமுருகேசனாட, ஞானசம்பந்தரொடு யிந்திரர்பதினெட்டு முனியஷ்டபாலகருமாட, நரைதும்பையறுகாட நந்திவாகனமாட நாட்டியப்பெண்களாட, வினையோடவுனைபாட யெனைநாடி யிதுவேளைவிருந்தோடு ஆடிவருவாய், ஈசனே சிவகாமிநேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. உ

கடலென்றபுவிமீதி லலையென்றவுருகொண்டு கனமென்றவாழ்வைநம்பி, காற்றென்றமூவாசை மாறுதச்சுழலிலே கட்டுண்டுநித்தநித்தம், உடலென்றகும்பிக்கி யுணவென்றயிரைதேடி ஓயாமலிரவுபகலும், உண்டுண்டுறங்குவதைக் கண்டதேயல்லாது ஒருபயனடைந்திலேனே, தடமென்றமிடிகரையிற் பந்தபாசங்களெனும் தாபரம்பின்னலிட்டு, தாயென்று சேயென்று நீயென்றுநானென்று தமியேனையிவ்வண்ணமாய், இடையென்று தடைநின்று யேனென்றுகேளா திருப்பதுன்னழகாகுமோ, ஈசனேசிவகாமி நேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ங

வம்புசூனியமல்ல வைப்பல்லமாரணந் தம்பனம்வசியமல்ல, பாதாளயஞ்சனம் பரகாயபிரவேச மதுவல்லஜாலமல்ல, அம்புகுண்டுகள் விலக மொழியுமந்திரமல்ல ஆகாயகுளிகையல்ல, அன்போடுசெய்கின்ற வாதமோடிகளல்ல, அறியமோகனமுமல்ல, கும்பமுனிமச்சமுனி சட்டமுனி பிர்மரிஷிகொங்கணர் புலிப்பாணியும், கோரக்கர்வள்ளுவர் போகமுனி யிவரெலாங் கூறிடும்வயித்தியமல்ல, என்மனதுன்னடிவிட்டு நீங்காதுநிலைநிற்க வேதுளவுபுகலவருவாய், ஈசனேசிவகாமிநேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ச

நொந்துவந்தேனென்று ஆயிரஞ்சொல்லியுஞ் செவியென்னமந்தமுண்டோ, நட்பநெறியறியாத பிள்ளையைப்பெற்றபின் நோகாததந்தையுண்டோ சந்ததமுந்தஞ்சமென் றடியைப்பிடித்தபின் தளர்ந்தநெஞ்சங்களுண்டோ, தந்திமுகனறுமுகன் யிருபிள்ளையில்லையோ தந்தைநீமலடுதானோ, விந்தையுஞ்ஜாலமும் உன்னிடமிருக்குதே வினையொன்றுமறிகிலேனே, வேதமுஞ்சாஸ்திரமும் உன்னையேபுகழுதே வேடிக்கையிதுவல்லவோ, இந்தவுலகீரேழு மேனளித்தாய்சொல்லு மினியன்

னைவிடுவதில்லை, ஈசனேசிவகாமி நேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ௫

வழிகண்டுவுன்னடியை துதியாதபோதிலும் வாஞ்சையில்லாதபோதும், வாலாயமாய்க்கோயில் சுற்றாதபோதிலும் வஞ்சமேசெய்தபோதும், மொழிபெகனைமொகனையில்லாமலேபாடினும் மூர்க்கனேன்முகடாகினும், மோசமேசெய்யினும் தேசமேகவரினும் முழுகாமியேயாகினும், பழியெனக்கல்லவே தாய்தந்தைக்கல்லவோ பார்த்தவர்கள் சொல்லார்களோ, பாரறியமனை விக்கிபாதியுடலீந்தநீபாலகனைக்காக்கொணாதோ, எழில்பெரியவண்டங்க ளடுக்காயமைத்தநீ என்குறைகள்தீர்த்தல்பெரிதோ, ஈசனேசிவகாமி நேசனேயெனை யீன்றதில்லைவாழ்நடராஜனே. ௬

அன்னைதந்தைகளென்னை யீன்றதற்கழுவனோ யறிவிலாதற்கழுவனோ, அல்லாமல்நான்முகன் தன்னையேநோவனோ ஆசைமூன்றுக்கழுவனோ, முன்பிறப்பென்னவினை செய்தனென்றழுவனோ மூடவறிவுக்கழுவனோ, பின்னிலென்வினைவந்து மூளுமென்றழுவனோ முத்திவருமென்றுணர்வனோ, தன்னைநொந்தழுவனோ உன்னைநொந்தழுவனோ தரித்திரதிசைக்கழுவனோ, இன்னமென்னப்பிறவி வருமோவென்றழுவனோ யெல்லாமுரைக்கவருவாய், ஈசனேசிவகாமி நேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ௭



காயாமும்மரமீது பூபிஞ்சறுத்தனோ கன்னியர்கள் பழிகொண்டனோ, கடனென்றுபொருள்பரித் தேவயரெறித்தனோ கிளைவழியில் முள்ளிட்டனோ, தாயாருடன்பிறவிக் கென்னவினைசெய்தனோ தந்தபொருளில்லையென்றனோ தானென்றுகெர்வித்துக் கொலைகளவுசெய்தனோ தபசிகளையேசினேனோ, வ யாரபொய்சொல்லி வீண்பொருள் பறித்தனோ வாணரைப்பழித்திட்டனோ, ஈயாதலோபியென்றே பெயரெடுத்தனோ யெல்லாம்பொருத்தருள்வாய், ஈசனேசிவகாமி நேசனே யெனையீன்ற தில்லைவாழ்நடராசனே. ௮

தாயாரிருந்தென்ன தந்தையுமிருந்தென்ன தன்பிறவியுறவுகோடி தனமலைகுவித்தென்ன கனபெயரெடுத்தென்ன தாரணியையாண்டுமென்ன, சித்துபலகற்றென்ன சித்தமும்விரதங்கள் செய்தென்றிருந்திகளெல்லால், ஒபாதுமூழ்கினும் பலனென்னவமனோலை ஒன்றைகண்[illegible]-டுக்க, உதவுமோயிதுவெல்லாம் சந்தைவுறவென்றுதான் வுன்னி

ருபதம்பிடித்தேன், யார்மீதுவுன்மன மிருந்தாலுடன்கடைக் கண்பார்வையதுபோதுமே ஈசனேசிவகாமிநேசனேயெனையீன்ற தில்லைவாழ் நடராசனே. ௯

இன்னமுஞ்சொல்லவோ உன்மனங்கல்லோ இரும்போபெரும் பாரையோ, இருசெவியுமந்தமோ கேளாதுஅந்தமோ இதுவுனக்சழகுதானோ, யென்னன்னைமோகமோ இதுவென்னசோபமோ இதுவென்னகோபமோ இதுவேயுன்செய்கைதானோஇருபிள்ளைதாபமோயார் மீதுகோபமோ ஆனாலும்நான்விடுவனோ, உன்னைவிட்டெங்குசென்றாலும்விழலாவனான் வுனையடுத்துங்கெடுவனோ, ஓம்காவிதின்குற்றமென்குற்றமொன்றுமில்லையுற்றுபார் பெற்றவையா, என்குற்றமாயினும் உன்குற்றமாயினும் யினிபருளளிக்கநினைவாய், ஈசனேசிவகாமிநேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ௧0

சனிராகுகேதுபுதன் சுக்கிரன்செவ்வாய்குரு சந்திரன்சூர்யனிவரை, சற்றெனக்குள்ளாக்கி ராசிபனிரண்டையுஞ் சமமாய் நிறுத்தியுடனே, பனியொத்தநக்ஷத்திரங்களிருப்பத்தேழும் பக்குவப்படுத்தினால், பகர்கின்றகிரணங்கள் பதினொன்றையும்வெட்டி பலரையும் அதட்டியென்முன், கனிபோலயேபேசிகெடுமதிநினைக்கின்ற கசடர்களையும்கசக்கி, கர்த்தனின்தொண்டராம்தொண்டர்க்குத்தொண்டரின் தொண்டர்கள் தொழும்புனாக்கி இனியவளமறுவுதிரு மதுரைபிதிர்சாமியென திருவுபெருவாழ்வுதருமா, ஈசனேசிவகாமி நேசனேயெனையீன்ற தில்லைவாழ்நடராஜனே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

உ

கடவுள் துணை.

# கண்டசுத்தி.

---

## விருத்தம்.

பணந்தேடி யாரிருந்தா ருலகமீதில்
　　பாவிதிரி யோதிரனும் பாட்டனாரும்
குணமான துரோணரவர் கருணன்பூரி
　　கூறிபதோர் தேத்தரசன் சகுனிசல்யன்
பிணமானா ரருச்சுனன்கை யம்பினாலே
　　பெண்டீரும் பணம்காசும் பிறகேபோச்சோ
மணமான வாழ்வுபொரு ளாடுமாடும்
　　மாய்கையடா பொம்மலாட்டாம் மதித்துப்பாரே.

ஆலித்தெழுந்து அபிராமன்மீது அனங்கனுற்றான்
பாலிக்கும்போது பெண்செய்குவான் பஞ்சபாணனம்பு
தாலிக்குமே பழந்தட்டுக்குமேனித் தழும்புபட
கூலிக்குமேவெட்டும் பெருமானிரவி குலோத்துங்கனே.

காண்டகண்டத் தொனிக் கஞ்சியமான்கருங் கங்குலிலே
திரண்டவெள்ளத்தின் பிணமீதுசென்றனள் சேர்ந்தவேளை
அரண்டவின்பங்கொண்டு மீளக்கரம்பற்ற அங்கொலுசால்
குரண்டகன்னத்தி லுதைத்தனள் காணங்குலோத்துங்கனே.

கடிமலர்பந்துகொண்டு கணவனும் கைக்கொண்டோச்சு
இடியெனச் சோர்ந்துவிழ்ந்தாள் யெனமுலைக்கொடுதனல்லாள்
முடியதுமுடவன்கையால் அரசன்முன்சுத்திக்கொண்டு
அடிபடக்கண்டதல்ல இது அம்பலத்ததிசயந்தான்.

வாரிடைபிடுங்கிமூட்டி வளரிளங் கொங்கைநல்லாள்
[illegible]ர்விழிகண்கள்சோர நேரிழையெழுந்து சென்றாள்
மார்சிலைதன்னைப்பற்றி மற்றவனடியும்பட்டு
ஆர்புறத்தழுவிக்கொண்டாள் இது அம்பலத்ததிசயந்தான்.

கம்பத்தூணாட்டி கனகவிளக்கெரிய
செம்பொன் அமளியின்மேல் சேரமல்செம்புருள்
புல்லூறல்மாறி புகைச்சல் புகைந்தனளே
[illegible]ள முத்துருளக் கண்டு.



சொன்னசொற்கேளாவேந்தன் துடியிடை மடவாள்கையில்
மன்னவன்கழுத்தறுக்க மனமதுதுணிந்து விட்டான்
தென்னிலைவேலனாரே திருத்தணி மலையில்வாழும்
அண்ணனும்நீரும்வந்து யென் அரசனையெழுப்பிடீரே.

சாதிபார்க்கந்தவிர்ந்து ஞானதவனின்ற தாழ்வினைதனக்கழுவனே, தடம்பெரியமைந்தனைத் தனியெவைத்தேவேந்தன்தலைகொய்ததற்கழுவனே, ஆதிநாள்தாலிதந் தாரியன்றனைக்கொன்ற அரவனுக்கேகாவழுவனே, வேதநூல்முறையிலா மைந்தனைத்தழுவியே வேந்தனனுக்கு நாணழுவனே, வெள்ளம்பிறந்துமே தள்ளாடியிடையரிடம் விட்டதற்கேகானழுவனே, ஈசனேசிவகாமி நேசனேயெனை யீன்ற தில்லைவாழ்நடராஜனே.

அன்றுயென்னன்னையுந் தந்தையுங்கூடியேயனுபவிப்பதுஞ்சஞ்சலம், அங்கொருஜலத்துளி தரிப்பதுஞ்சஞ்சலம் தரித்ததற்பின் ஆளானதுஞ்சஞ்சலம், பெண்ணையுமண்ணையும் விரும்புவதுசஞ்சலம் பெண்டிலாதிருப்பதுஞ்சஞ்சலம், என்றுதான்சஞ்சலம் ஒழிந்துயான் தொழுங்கருணை உன்திருவடிக் காளாவனோ, வள்ளிதெய்வானையுடன் வாழுமயிலேறியே வரவேண்டுமெந்தனருகே.

தெலுங்கருளி சென்றுதமிழ் பாடினால்மாகு அரவம் தெலியது ஒபிச்சிவாடாயென்பாராம், நீவுசெப்பேதிகிந்தலோருள் வேசிதிப்பினட்டுன்னதி செப்பவொத்தேயென்பாராம், அலங்கொடு துலுக்கர்தாம் இரவில் அச்சானைதுமாரிபாஞ்சோத்தென்பாராம், துலங்கும் கன்னடர் கடாம் குங்காத்தோதுமது தெளிதினிந்தெளிதல்லவே, ஒத்துகாகாருகொட்டாகன்னி வோவோவென்பாராம், நிலையானபுவியாளும் இங்கிலீஸ் காரரும் டமிழ்னோகோ வென்பாராம், இவரெலாம் இத்தமிழ்க் குரியராவரோ வேண்டுமென் அற்புதநடராஜனே.

திருச்சிற்றம்பலம்.

---



பூர்வமானது !! பிரசித்தியடைந்தது !! சஞ்சீவிபோன்றது !!

# அயக்காந்த திராவகம்.

---

மித்திரர்களே ! இந்த அபூர்வமருந்தானது அநேக கொடியவியாதிகளை ஆச்சரியமாய் கண்டிக்கக்கூடியது. இதை அனேக ஆயிரக்கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர் வியாதியினாலாவது கெட்ட சகவாசத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிர்த்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும் ஆங்கிலேயமுறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையானமருந்து சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல்நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டேவேளையில் ஆச்சரியமாக சுகத்தையடைவார்கள். இதனால் தீரக்கூடிய அநேகவியாதிகளில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.

நரைத்தமயிரைக் கறுப்பாக்கும். உஷ்ணத்தினாலாவது புழுவெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும். நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல்கைகால் இவை தீரும். முகவசீகரத்தைஉண்டாக்கும்; தேக அசதியைபோட்டும் ஜீரணசக்தியையும் நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும். நரம்புகளுக்கு அதிகவலுவைத்தரும். தேகத்தில்நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும். க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும்,வாதபித்த சிலேத்துமத்தா லுண்டாகும் ரோகங்களை நிவர்த்திக்கும்.சத்ததாதுகளுக்கும் நல்ல பலத்தைத்தரும். மூலச்சூடு மூலவாய்வு மலச்சிக்கல்இவைதீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போசனத்துடன் 20-நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத்தரும். இழந்துபோனதேகதிடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறுமருந்தே கிடையாது. 40-நாள் மருந்துஉட்கொள்ளும் பக்ஷத்தில் வியாதி என்பதே அம்மனிதனின் நிழலைக்கூட அணுகாது. தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

### இந்த திராவகத்தை உட்கொள்ளவேண்டிய முறை.

அரைக்கால் ஆழாக்கு சுத்தஜலத்தில் திராவகத்தை 5-துளி அல்லது7-துளி அதில்விட்டுக் கலக்கிக் குடித்துவிடவேண்டும். பத்தியமே கிடையாதுஇதைப்பற்றியவிவரங்கள் பார்சலோடு வைத்துவரும்.

அரைமண்டலம் 20-நாளைக்கு வரக்கூடிய ஒருபுட்டியின் விலை
ரூபாய் 1 4 0 டஜன் 1-க்கு ரூபா—12.

ஒருமண்டலம் 40-நாளைக்கு வரக்கூடிய ஒரு புட்டியின் விலை
ரூபா 2 0 0 டசன் 1-க்கு ரூபா—21.

இப்படிக்கு,
பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்,
பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு, மதராஸ்.